REGD. No. TN MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone 812818 4 பக்கம் விலை 35 காசு




# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்




மலர்: 4 சென்னை 20-8-1980 புதன் (*) ❋ ● ❋ (*) வெளியீடு: 21—8—1980 வியாழன் இதழ் 282

## ப.உ.ச. கடிதம்

### அடுப்பு நெருப்பைக் கண்டு அஞ்சவேண்டாம்

பேரன்புடையீர்.

நாலைந்து நாட்களாகப் பத்திரிகைகளைப் பார்த்தீர்களா?

கோபிக்காதீர்கள் கவனித்தீர்களா?

நம் நாட்டு மக்கள் தொகை மிக அதிகம்;

அச்சாகும் பத்திரிகைகள் மிகக் குறைவு.

அவைகளில் உண்மைச் செய்திகளை வெளியிடுபவைகள் குறைவு.

அதிலும் செய்திகளை முழுமையாக வெளியிடுபவைகள் குறைவு!



முக்கியச் செய்திகளுக்கு முக்கியத்துவம் கொடுப்பவைகள் குறைவு!

அந்த அரை குறைச் செய்திகளை வாங்கிப் பார்ப்பவர்கள் குறைவு. அதைவிடக் குறைவு படிப்பவர்கள். அதனினும் குறைவு படித்ததை நினைவில் வைத்திருப்பவர்கள்!

உண்மையான செய்திகள் மக்களிடம் போய்ச் சேர இவ்வளவு சங்கடங்கள் உள்ளன!

அதனால் தான் படித்தீர்களா என்று கேட்டேன்.

கூடை மல்லிகைப் பூவின் மணம் பரவுவதைவிட செத்துவிட்ட ஒரு எலியின் துர்நாற்றம் வேகமாகப் பரவும்!

நல்ல செய்திகள் பரவுவதைவிட வதந்திகள் வேகமாகப் பரவும்!

நாட்டில் நெருப்பு பற்றி எரிவதை மறைப்பார்கள்! பறக்கும் தூசியை புகையும் நெருப்பென்று கதை அளப்பார்கள். இது இன்றைய அரசியல் தலைவர்களின் போக்கு என்பது நீங்கள் அறிந்த உண்மைதான்.

மாமியார் வீட்டில் தன் மகள் செய்யும் அட்ட

(2-ம் பக்கம் பார்க்க)

## அயல்நாடுகளில் வாழும்

# தமிழருக்கு உதவும் புதிய திட்டம்

## முதல்வர் புரட்சித்தலைவர் அறிவிப்பு

சென்னை, ஆக. 20-கடல்கடந்து வாழும் தமிழர்கள் தமிழகத்துடன் கலாச்சார உறவு கொள்ள விரிவான திட்டம் ஒன்றைத் தமிழக அரசு விரைவில் தயாரிக்க இருப்பதாக முதல்வர் புரட்சித்தலைவர் அறிவித்தார்.

இத்திட்டம் மத்திய அரசின் மூலம் யுனெஸ்கோ உதவி பெற அனுப்பி வைக்கப்படும் என்றும் கூறினர்.

தமிழகம் வந்துள்ள யுனெஸ்கோ டைரக்டர் ஜெனரல் டாக்டர் எம். பவ்வுக்கு முதல்வர் புரட்சித்தலைவர் ஒரு விருந்து அளித்தார்.

யுனெஸ்கோ டைரக்டர் ஜெனரலை வரவேற்று முதல்வர் புரட்சித்தலைவா பேசியதாவது:-

ஐக்கிய நாடுகளின் கல்வி அறிவியல் கலாச்சார நிறுவனத்தின் வேளாண்மை இயக்குனர் டாக்டர் எம். பவ் அவர்களையும், திருமதி எம். பவ் அவர்களையும், அவர்கள் குடும்பத்தினரையும் தமிழகத்தில் வரவேற்கும் வாய்ப்பு பெற்றதை, நானும் என் அரசைச் சேர்ந்த மற்ற அமைச்சர்களும் பெரும் பேருகவும், பெருமையாகவும் கருதுகின்றோம்.

யுனெஸ்கோ டைரக்டர் ஜெனரல் தமிழகத்திற்கு வருகை புரிந்துள்ளது இதுவே முதல முறையாகும், அம்முறையில் எங்களுக்கு இவ்வருகை இரட்டிப்பு மகிழ்ச்சியைத் தருகின்றது.

தனிப்பட்ட முறையில் டாக்டர் எம். பவ் ஏற்கெனவே ஒருமுறை செனகல் நாட்டின் அதிபருடன் தமிழகத்திற்கு வந்துள்ளார் யுனெஸ்கோவின் தலைவர் என்ற முறையிலும் தமிழகத்தின் உற்ற நண்பர் என்ற முறையிலும் அவரைத் தமிழகத்தின் நாலரை கோடி மக்களின் சார்பில் இன்று வரவேற்பதில் பெருவகை கொள்கின்றேன்.

### புதியதோர் சமுதாயம் அமைக்க...

சமாதானம், சமத்துவம் சகோதரத்துவம் ஆகிய அடிப்படைகளின் பேரில் புதியதொரு சமுதாயத்தைப்படைக்கும் பணியின் முன்னோடியாக அந்த உணர்வுகளை முதலில் மக்களின் உள்ளத்தில் எழுப்பி நிலைநிறுத்த வேண்டும் என்பது மனித சமுதாயத்தின் நலனில் நாட்டம் கொண்ட அனைவரின் ஒருமித்த கருத்தாகும். இப்பணியில் யுனெஸ்கோ ஆற்றிவரும் பங்கு மகத்தானது. எழுத்தறிவின்மையை அறவே அகற்றுதல் அனைவருக்கும் தொடக்கக் கல்வி அளித்தல், சமூக இனவேறுபாடுகளைக் களைதல், கிழக்கு, மேற்கு நாடுகளில் கலாச்சாரங்களை இருதரப்பினரும், அறிந்து பாராட்டிப்போற்றி பேணுவதற்கான சூழ்நிலையை உருவாக்குதல், வாழ்க்கைத் தரம் உயர்வதற்கான வழிவகைகளைக் காண்பதில் அறிவு பூர்வமான ஆராய்ச்சி நடத்துதல் ஆகியவையே யுனெஸ்கோவின் ஐம்பெரும்கொள்கையாகும.

இந்த உயரிய கோட்பாடுகளை இந்தியத்துணைக் கண்டம் என்றுமே ஏற்றிப் போற்றியுள்ளது என்பது வரலாறு கண்ட உண்மையாகும்.

அதிலும் குறிப்பாக இந்தியத் துணைக்கண்டத்தின் பகுதியான தமிழகத்தின் பண்பாட்டிலும் பாரம்பரியத்தோடும் ஒன்றி நிற்பவை இந்தக் கோட்பாடுகள்.

### ஆயிரம் ஆண்டுகட்கு முன்பே...

ஆயிரம் ஆண்டுகட்கு முன்பே "யாதும் ஊரே, யாவரும் கேளிர்" என்ற உலகப் பொதுமையை உணர்த்தியவர் தமிழ் கவிஞர் கணியன் பூங்குன்றனா,

இன, சமுக- தேசிய வேறுபாடுகளுக்கு அப்பாற்பட்டு மக்கள் அனைவரும் வளமான, வசய்மையான வாழ்வு வாழ்ந்து தங்கள் உயர்வுக்கும் அதன் மூலம் தரணியின் உயர்வுக்கும் பாடுபட வேண்டும் என்ற உணர்வு இந்திய மக்களுக்கும், குறிப்பாகத் தமிழக மக்களுக்கும் என்றுமேதலையாய உணர்வாக அமைந்துள்ளது.

### கல்விக்கு பெரும் தொகை

தமிழகத்தைப் பொறுத்தவரையில் தன்னுடைய வருவாயில் 25 சதவிகிதத்தைக் கல்வியின் வளர்ச்சிக்காக ஒதுக்கி பள்ளிச் சிறுவர்களிடையே மட்டுமல்லாமல், பாமர மக்களிடையேயும் கல்வி அறிவைப் பரப்பி முற்போக்கான பல திட்டங்களை நாம் நிறைவேற்றி வருகின்றோம்.

சாதி மத இன வேறுபாடின்றி மாணவர் அனைவருக்கும் 12ம்வகுப்புவரை இலவசக் கல்வி தமிழ்நாட்டில் அளிக்கப்படுகிறது.

8ம் வகுப்புவரை ஏழைக் குழந்தைகளுக்கு மதிய உணவும் இலவசமாக வழங்கப்படுகின்றது.

ஒன்று முதல் மூன்று வகுப்புகள் வரை பயிலும் ஏழைக் குழந்தைகளுக்குப் புத்தகங்கள் மற்ற கல்வி சாதனங்கள் பள்ளிச் சீருடைகள் ஆகியவற்றை அரசேதன் நிதியில் இருந்து வழங்கி வருகின்றது.

### கலாச்சாரஉறவு- புதிய திட்டம்

கடல் கடந்து வாழும் தமிழருக்குத் தமிழ்மொழி பயிற்சி பெறுவதற்கான வாய்ப்புகளும், வசதிகளும் செய்து தருவதில் இந்த அரசு மிகுந்த நாட்டம் கொண்டுள்ளது.

எங்கள் அமைச்சரவையில், என் தோழர்களாகப் பணியாற்றும் நிதி அமைச்சர் டாக்டர் நாவலர் நெடுஞ்செழியன், கல்வி அமைச்சர் அரங்கநாயகம் ஆகியோர் அண்மையில் மொரீஷியஸ், ஸெஷெல்ஸ் தீவுகளுக்கும், தமிழர்கள் வாழும் மற்ற பகுதிகளுக்கும் சென்று, அவர்களுடன் தமிழ்த்தாயகம்தொடர்ந்து கலாச்சார உறவுகொள்ள திட்டங்களை வகுப்பதற்குப் பரிந்துரைகள் செய்துள்ளனர்.

இதற்காக விரிவான திட்டம் ஒன்றைத் தமிழகம் விரைவிலேயே வகுத்து யுனெஸ்கோவிற்கு, மத்திய அரசின் மூலம் அனுப்பி வைக்கும் இத்திட்டத்திற்கு யுனெஸ்கோவின், ஆதரவும், உதவியும் தாராளமாகக் கிடைக்குமென்று நான் எதிர் பார்க்

(2-ம் பக்கம் பார்க்க)

## தஞ்சை மாவட்டத்தில்

# புரட்சித்தலைவரை வரவேற்க சிறப்புமிகு ஏற்பாடுகள்

## பங்கேற்கும் நிகழ்ச்சிகள் விவரம்

தஞ்சை, ஆக. 20- நாளை (21ந் தேதி) தஞ்சை மாவட்டத்தில் சுற்றுப் பயணம் மேற்கொள்ளும் புரட்சித்தலைவரை வரவேற்க சிறப்பான ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. புயல் பாதுகாப்புக் கட்டிடம் உட்பட மக்கள் நலத்திட்டங்களை முதல்வர் புரட்சித்தலைவர் தொடங்கி வைக்கிறார்.

தஞ்சைக்கு நாளை (ஆகஸ்ட் 21ந் தேதி) வருகைத்தரும் தமிழக மக்களின் நம்பிக்கை நாயகன்- முதல்வர் புரட்சித் தலைவரை வரவேற்க சிரும் சிறப்புமிக்க ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன.

இந்த ஏற்பாடுகளை கழகத் தோழர்களும் முன்னணியினரும் கவனித்து வருகிறார்கள்.

முதல்வர் புரட்சித்தலைவருடன் வருவாய்த்துறை அமைச்சர் எஸ்.டி.எஸ், சுற்றுலா வாரியத்தலைவர் துரை. கோவிந்தராஜன் ஆகியோரும் நிகழ்ச்சிகளில் கலந்து கொள்கிறார்கள்.

முதல்வர் புரட்சித்தலைவரின் சுற்றுப்பயண விவரம் வருமாறு:-

21 ந்தேதி (நாளை) காலை 10மணி நாகை திருமண நிகழ்ச்சி.

அதன்பின் பிரதாமராமபுரத்தில், புயல் பாதுகாப்புகட்டிட திறப்புவிழா பின்னர் கீவளூரில்கிராம தன்னிறைவுத் திட்டத்தின் கீழ் குடிநீர் வழங்கும் திட்டத்தை ஆய்வு செய்தல்.

பிற்பகலில் தஞ்சை ராஜாமிராசுதார் அரசு மருத்துவமனையில் புதிய அறுவை சிகிச்சை கூடத் திறப்புவிழா.

மேற்கண்ட நிகழ்ச்சிகளில் முதல்வர் புரட்சித் தலைவர்பங்கேற்கிறார்.

### அமைச்சர் அரங்கநாயகம் வானொலியில் பேசுகிறார்



சென்னை, ஆக. 20- தமிழக கல்வி அமைச்சர் அரங்கநாயகம் அண்மையில் தாம் மேற்கொண்ட வெளிநாட்டுப் பயணம் குறித்து சென்னை வானொலிக்கு பேட்டி ஒன்று அளித்துள்ளார். இப்பேட்டி இன்று 20-ந் தேதி மாலை 7-00 மணிக்கு சென்னை வானொலி மூலம் ஒலிப்பரப்பாகும். இதனைத் தமிழ்நாட்டின் அனைத்து வானொலி நிலையங்களும் அஞ்சல் செய்யும்.

### போலீஸ் அதிகாரிகளுடன் முதல்வர் புரட்சித்தலைவர் ஆலோசனை

சென்னை, ஆக. 20- முதல்வர் புரட்சித்தலைவர் இன்று போலீஸ் உயர் அதிகாரிகளுடன் ஆலோசனை நடத்தினர்.

இந்த ஆலோசனைக் கூட்டத்தில் போலீஸ் டைரக்டர் ஜெனரல் அப்துல்லா ஐ ஜிக்கள் சென்னை மாநகர கமிஷனர் உயர் போலீஸ் அதிகாரிகள், உள்துறை செயலாளர் ஆகியோர் கலந்து கொண்டனர்,

சட்டம் ஒழுங்கு மது விலக்கு மற்றும் போலீஸ் சம்பந்தப்பட்டவைகள் பற்றி இந்தக் கூட்டத்தில் ஆலோசிக்கப்பட்டது.

### சென்னை நகரில் தடை உத்திரவு

சென்னை, ஆக, 20- சென்னைநகர எல்லைக்குள் முன் அனுமதி இன்றி ஊர்வலம் பொதுக் கூட்டம், ஆர்ப்பாட்டம் நடத்த இன்று (20ந்தேதி) முதல் செப்டம்பர் 4ந்தேதிகாலை வரை போலீஸ் கமிஷனர் எஸ் ஸ்ரீபால் தடை உத்திரவு பிறப்பித்துள்ளார்.

### புரட்சிதலைவரின் உடனடி நடவடிக்கை

3-ம் பக்கம்

தலைமைக் கழக அறிக்கைஎண்: 93/80

## அச்சக நிதி: ஓர் அறிவிப்பு

அச்சக நிதிக்கான டிக்கெட்டுகள் தலைமைக் கழகத்தில் தயாராக உள்ளன.

சட்டமன்றப் பேரவை-மேலவை, நாடாளுமன்ற-மாநிலங்களவை உறுப்பினர்கள், மாவட்ட, தொகுதி, ஒன்றிய, கிளைக்கழக அமைப்பாளர்களும, கழகத்தைச் சார்ந்த சார்பு மன்ற அமைப்பாளர்களும் சென்னைக்கு வந்து, மாண்புமிகு புரட்சித்தலைவரிடம் நேரடியாக டிக்கெட்டுகளைப் பெற்றுக்கொண்டு போகவும்.

சென்னை-14
20-8-80

-தலைமைக்கழகம்
அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம்

# கைது செய்ய முடியுமா என சவால் விட்ட காளி கைது

சென்னை, ஆக.20 சென்னையில் பல இடங்களில் கத்தியை காட்டி கொள்ளையடித்து போலீசாருக்கு சவாலாக இருந்து வந்த பிரபல ரவுடி காளியை சென்னை நகர போலீசார் இன்று கைது செய்தனர்.

சென்னையில் இரவு நேரங்களில்சினிமாபார்த்து விட்டு திரும்பும் பொது மக்களிடம் கத்தியைக் காட்டி மிரட்டி அவர்களிடம் இருந்து கைகடிகாரம், பணம், மோதிரம் ஆகியவைகளை பறித்துக்கொண்டு, போலீசாருக்கு சவால் விட்ட காளியை (வயது-24) சென்னை நகர போலீசார் இன்று கைது செய்தனர்.

முதலில் கொத்தவால் சாவடியில் கூளி மூட்டை தூக்கி பிழைத்து வந்தான் பிறகு அவன் இப்பகுதியில் உள்ள சில ரவுடிகளோடு சேர்ந்து பெரிய குத்துச் சண்டை பயிற்சி பெற்று பெரிய குத்துச்சண்டை வீரனாக மாறினான்.

இதை பயன்படுத்திக் கொண்டு அவன் அப்பகுதியில் கடைகளிலும், ஒட்டல்களிலும் தினசரி தனக்கு 'மாமூல்' கொடுக்க வேண்டும் என்று மிரட்டி வந்தான். அவ்வாறு அவர்கள் கொடுக்க மறுத்தால் அவர்களை கத்தியை காட்டி மிரட்டி பணத்தை பிடுங்கிக் கொண்டுபோவான் இதனால் இப்பகுதியில் இவனைபார்த்தால் எல்லோரும் பயந்து அவன் கேட்பதை கொடுத்து வந்தனராம்.

ஒருநாள் அப்பகுதியைச் சேர்ந்த ஒரு ரவுடிக்கும், காளிக்கும் வாய் தகராறு ஏற்பட்டு கடைசியில் அது ஒரு பயங்கர மோதலாக மாறியது. இருவரும் மோதிக் கொண்டனர். இது கோஷ்டி சண்டையாக உருவெடுத்தது. கொத்தவால் சாவடி அருகில் உள்ள லோன்ஸ் கொயர் என்ற இடத்தில் பட்டப்பகலில்இருகோஷ்டியினரும் சோடாபாட்டில் கத்தி பயங்கர ஆயுதங்களுடன் மோதிக் கொண்டனர். இதனால் அப்பகுதியில் 3 மணி நேரத்திற்குமேல் போக்குவரத்து தடையானது. அப்பகுதியில் உள்ள கடைகள் அனைத்தும் மூடப்பட்டன பொது மக்கள் பலர் சோடா பாட்டில் வீச்சினால் படுகாயம் அடைந்தனர்.

தகவல் கிடைத்தவுடன் போலீசார் அந்த இடத்திற்கு விரைந்து சென்றனர். போலீசார் வருவதைக்கண்டதும் காளி அந்த இடத்திலிருந்து தப்பி சென்று விட்டான். அதிலிருந்து போலீசார் காளியை தீவிரமாக தேடிவந்தனர். அவன் போலீசாருக்கு சவால் விட்டு தலைமறைவாகவே இருந்து வந்தான். பல இடங்களில் பட்டப்பகலில் கத்தியைக் காட்டி பொது மக்களிடம் கொள்ளையடித்து வந்தான். அப்போது அவன் அவர்களிடம் "நான்தான் காளி. போலீசாரிடம் போய்ச் சொல்லு" என்று சொல்வான்.

இம்மாதிரி அவன் சென்னையில் 3 இடங்களில் கத்தியைக் காட்டிக் கொள்ளையடித்தான். இச்சம்பவம் போலீசாருக்கு ஒரு சவாலாக இருந்து வந்தது. இதற்கிடையில் அவன் ஒரு போலீஸ் அதிகாரிக்கு ஒரு மிரட்டல் கடிதம் அனுப்பியிருந்தான் அதில் தன்னைபிடிக்கமுயன்றால் உங்கள் உயிருக்கு ஆபத்து என்று எழுதியிருந்தான்.

சென்னை நகர போலீசார் இதை சவாலாக ஏற்று இரவு, பகலாக காளியைத்தேடிவந்தனர். இன்று (20ந்தேதி) காளி விருகம்பாக்கம் அருகில் உள்ள எம். ஜி. ஆர் நகரில் மறைந்திருப்பதாக போலீசாருக்கு தகவல் கிடைத்தது. சென்னை நகரப் போலீஸ் குற்றப்பிரிவு துணை கமிஷனர் ரமணன் உத்தரவின் பேரில் உதவி கமிஷனர் மீனாட்சி சுந்தரம் மேற்பார்வையில் இன்ஸ்பெக்டர் மனோகரன் வேதகண்ணு, சப் இன்ஸ்பெகடர் சாந்தகுமார கிருஷ்ணன், ஏட்டு கோவிந்தசாமி, ராஜகோபால்ஆகியோர்போலீஸ் படையுடன் அங்கு சென்றனர். அங்கு விருகம்பாக்கம போலீசார் உதவியுடன் காளி மறைந்திருந்த இடத்திலிருந்துகைதுசெய்தனர்.

பிறகு போலீசார் விசாரணையில் காளி தான் சென்னையில் பல இடங்களில் கொள்ளையடித்ததாக ஒத்துக்கொண்டான்.

காளி விருகம்பாக்கத்தில் இருந்தபோது அப்பகுதியில் உள்ள ஒட்டல்களில் கத்தியைக் காட்டி மிரட்டி தினமும் 40 விருந்து 50 முட்டைகள் இலவசமாக சாப்பிட்டு வந்தானம். பிறகு அப்பகுதியில் உள்ள சினிமா தியேட்டர்களில் இவனுக்கு ஒரு காட்சிக்கு ரூ. 50 தரவேண்டும்என்று மிரட்டி பணம் வாங்கி செலவு செய்து வந்தானும் இந்த சம்பவங்கள் போலீஸ் விசாரணையின் போது தெரியவந்தன.

தற்போது போலீசார் அவன் கொள்ளையடித்து விற்ற பொருட்களைக் கைப்பற்றி வருகின்றனர்.

மேலும் விசாரணையில் இவன் சென்னையில் உள்ள பெரிய பிக்பாக்கட் கும்பலுக்கு உதவியாக இருந்ததாகவும் அவர்கள் பிக்பாக்கட் அடிக்கும் பணத்தில் 100ருபாய்க்கு 15ருபாய் இவனுக்கு கொடுத்துவந்ததாகவும் தெரியவந்துள்ளது. இதுகுறித்து போலீசார் விசாரணை செய்துவருகின்றனர் மேலும் இவனுடைய கூட்டாளிகளை தற்போது போலீசார் தேடிவருகின்றனர்.

காளிக்கு ஒன்றரை ஆண்டுக்கு முன்பு திருமணம் நடந்தது. மனைவியின் பெயர் பாக்கியம். (வயது 20) இவனுக்கு தற்போது ஒரு பெண் குழந்தை இருக்கிறது.

சென்னையை உலுக்கி, போலீசாருக்கு சவால் விட்ட காளியைக் கைது செய்த போலீசார் தொடர்ந்து விசாரணை நடத்தி வருகிறார்கள்.

## சென்னை-புதுவை புதிய சொகுசு பஸ சர்வீஸ்

சென்னை, ஆக. 20-திருவள்ளுவர் போக்குவரத்துக் கழகம் சென்னையில் இருந்து பாண்டிசேரிக்கு புதிய சொகுசு பஸ்சர்வீஸ் ஒன்றை இம்மாதம் 18ந்தேதியிலிருந்து துவங்கியுள்ளது.

இந்த பஸ் சென்னையிலிருந்து புறப்பட்டு செங்கல்பட்டு மதுராந்தகம், திண்டிவனம் வழியாக புதுவைக்கு செல்கிறது.

சென்னையிலிருந்து காலை 9-மணிக்கு புறப்பட்டு பகல் 12-55க்குப் புதுவை போய்ச்சேருகிறது. இரவு 9 மணிக்கு ஒரு பஸ் புறப்பட்டு நள்ளிரவு 12-55க்கு புதுவை செல்கிறது.

புதுவையில் இருந்து பிற்பகல் 2-மணிக்கு ஒரு பஸ் புறப்பட்டு மாலை 5 55க்கு சென்னை வந்தடையும். அதேபோல் இரவு 2 மணிக்கு புறப்பட்டு காலை 5-55மணிக்கு சென்னை வந்தடையும்; சென்னை முதல் புதுவை வரை செல்ல பஸ் கட்டணம் 11 ருபாய்.

## ப. உ. ச. கடிதம்

(1-ம் பக்க தொடர்ச்சி)

காசத்தைப்பற்றிக் கவலைப்படாதவள் தன் மருமகள் செய்யும் பணிவிடையை நடிப்பு என்று இடித்துரைப்பாளாம்! என்ன செய்வது? மாமியாரைக் குறை சொல்லக் கூடாது நம் மகள் கொடுத்துவைத்தது அவ்வளவுதான்.

"அலிகாருக்குக் கலவரம் பரவுகிறது. ராணுவம விரைகிறது"

'மொராதாபாத்தில் துப்பாக்கிச் சூட்டில் இறந்தவர்கள் எண்ணிக்கை 130"

"பரோடா, பவநகர், ராஜ்கோட் கலவரப்பகுதிகளாக அறிவிக்கபபடுகின்றன"

"ஆகரா அருகில் கொள்ளைக்காரனைப் பிடிக்க நடந்தத் துப்பாக்கிச் சூட்டில் 3 பேர் இறந்தனர்."

"ஸ்ரீநகரில் இருவர் சுட்டுக் கொல்லப் பட்டனர்."

"டெல்லியில்கலவரம் கட்டுக்கடங்கிவருகிறது. இராணுவம் ரோந்து வருகிறது.

"மொராதாபாத்தில் கொள்ளையடித்த போது இருவர் இறந்தனர்.

"கர்நாடகத்தில் கடையடைப்பு பெருங் கலவரமாக மாறியது"

"கர்நூலில் பஸ்ஸிலிருந்து மூவர் இழுத்துக் கொல்லப்பட்டனர்"

"டெல்லியிலும் அலகாபாத்திலும் ஊரடங்குச் சட்டம் பிறப்பிக்கப் பட்டுள்ளது.

"ஜும்மா மசூதி- சாந்தினிசௌக் ஆகிய இடங்களில் பயங்கரகொள்ளை தீவைத்தல்"

"மத்திய பிரதேசத்தில் மோதல் இருவர் மரணம் 'மோ' எனும் நகர் ஊரடங்கு சட்டத்தின்கீழ் கொண்டு வரப்பட்டது"

"ஆமதாபாத்தில் ராணுவம் சுற்றுகிறது"

"உஜ்ஜெயின் நகரில் பேருந்து பயணிகள் கொள்ளையடிக்கப்பட்டனர்"

மேலே எழுதி உள்ளவைகள் எப்போதோ நடந்தவைகள் என்றெண்ணாதீர்கள், அனைத்தும் நாலைந்து நாட்களாக.

**'காஷ்மீரம்' தவிர மற்ற எல்லா மாநிலங்களும் இ.காங்கிரஸ் ஆட்சி நடத்துபவைகளே.**

அன்றாடம் நடக்கும் நிகழ்ச்சிகளாகிவிட்டன. வட மாநிலங்களில் நடக்கும் இத்தகையச் சம்பவங்கள் இதற்கு முன்பு நடந்ததில்லை.

கலவரம்-துப்பாக்கிச்சூடு- ஊரடங்குச் சட்டம், இராணுவம் ரோந்து வருதல் இவைகள் அன்றாட நிகழ்ச்சிகள்!

சட்டம் அமைதி என்ற பேச்சே இல்லை. அங்கெல்லாம் நடக்கும் சம்பவங்களைக் காணாதவர்கள் போல நடிக்கிறார்கள்!

ஒரே ஒரு சம்பவம் அதுவும் நக்சலைட்டுகளைப் பிடித்து வரும்போது திருப்பத்தூரில் நடந்தது அதற்காக ஆட்சியைக் கலைக்க வேண்டுமென்று துடிக்கிறார்கள். சட்டம் அமைதி கெட்டுவிட்டதென்று தீர்மானம் போடுகிறார்கள்.

மற்றைய மாநிலங்கள் மகள் வாழும் வீடு, தமிழ்நாடு மருமகள் வந்த வீடு!

கற்பழித்தல் நடைமுறை பழக்கமாகிவிட்டது வடபுலத்தில்!

உயிரோடு மருமகளைக் கொளுத்துதல் கடமையெனக்கருதும் மாமியார்கள் வடபுலத்தில்'

இவைகளை மறைக்க தமிழ்நாட்டில் தீர்மானம் உண்ணாவிரதம்!

"அன்றாடம் இல்லையென்று சொல்கிற புண்ணியவதி இல்லையென்றாள். தினமும் போட்டு வந்த தட்டுவாணி ஏன் இன்றைக்கு இல்லை என்றாள்?" என்று பண்டாரம் சொன்னால் என்ன நினைப்பது? அதுபோல் இருக்கிறது அன்றாடம் வடக்கே நடைபெறும் நிகழ்ச்சிகளைக் கவனியாது ஒரே ஒருநாள் நடந்த திருப்பத்தூர் நிகழ்ச்சியை வைத்துக்கொண்டு தீர்மானம் போடுவது.

**"இந்தியா ஒரே நாடு. கற்பழிப்பு எங்கு நடந்தாலென்ன?" என்பதற்காக உண்ணாவிரதம் இருக்கிறார்களோ?**

**உத்திரப்பிரதேசத்தில் எரியும் நெருப்பை அணைக்கத் தமிழ்நாட்டில் தண்ணீர் ஊற்றுகிறார்கள் போலும்!**

**வேடிக்கை!**

தமிழ்நாடு இ. காங்கிரஸ் கட்சிக் கூட்டத்தில் தமிழ்நாட்டில் சட்டம் அமைதி கெட்டுவிட்டதாகத் தீர்மானம் போடுவதன் காரணம் என்ன?

ஒருவேளை தமிழ்நாடு இ. காங்கிரஸ் கட்சிக்குள் உள்ளதுபோல் குழப்பம் வேறெங்கும் இல்லை; கட்சியின் சட்டங்களை எவரும் மதிக்கவில்லை; அமைதி அடியோடு அழிந்து விட்டது எனவே கட்சிக்குள் சட்டம் அமைதி கெட்டுவிட்டது அதனால்தான் இப்படி ஒரு தீர்மானம் போட்டார்கள் போலும்!

ஒன்றுமே இல்லாதபோது இப்படி தீர்மானம் போடுவதும் உண்ணாவிரதம் இருப்பதும் நல்லதல்ல.

நிலவிலே குடைபிடிப்பது கேலிக்குரியது

அமளி நடப்பது எங்கே? அமைதி நிலவுவது எங்கே!

பூகம்பம். நடப்பது இ காங்கிரஸ் ஆளும் மாநிலங்களில்!

தானே தள்ளாடிக் கொண்டு பூமி ஆடுகிறதென்கிறார்கள் தமிழ்நாட்டில்

**வேண்டாம் இந்த விவேகமற்ற செயல் என்று இ. காங்கிரஸ் நண்பர்களுக்குச் சொல்லுங்கள்!**

**தண்டிக்கப்பட வேண்டியவன் துயில் உரியும் துச்சாதனனே யொழிய ஆடை தரும கண்ணன் அல்ல.**

**எரிமலையைமூட முயற்சிக்கட்டும் அதை விட்டு அடுப்பில்உள்ள நெருப்பைக்கண்டு அஞ்சவேண்டாம்**

அன்புள்ள

**ப. உ. ச.**

## புரட்சித்தலைவர் அறிவிப்பு

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

இன்றேன்:

"அறிவு அற்றம்காக்கும் கருவி மற்றும் செறுவார்க்கும் உள்ளழிக்கலாகா அரண் என்று உலகக் குடிமகனான" தமிழ் நாட்டைச் சேர்ந்த திருவள்ளுவர் பலநூற்றாண்டுகளுக்கு முன்பே எடுத்துக்காட்டியுள்ளார்.

சொந்த நாட்டுப் பண்பாட்டிலே உறுதியாக ஊன்றி நின்று அதே சமயத்தில் உலக நாடுகளின் கலாச்சாரவளம், அறிவியல் கோட்பாடுகள் ஆகியவற்றினாலும் பலன் பெறும் வகையில் இந்தியமக்கள் தங்கள் தாய் நாட்டுத் தரையிலே கால் ஊன்றி தரணி முழுவதையும் அரவணைக்கக் கரங்களை எதி நீட்டுவார்கள் என்று தேசியக் கவிதாகூரும், நாட்டின்தந்தை மகாத்மா காந்தியும் இலட்சியக் கனவு கண்டார்கள்.

அந்தக் கனவைநனவாக்கும் பணியில்தான் தமிழக அரசு தமிழ் மக்களின் பேராதரவுடன் முனைப்பாகச் செயல்பட்டு வருகிறது. இதுவரை தமிழ் நாட்டுக்கலாச்சாரத்தைப் போற்றிப்பேண பல்வேறு திட்டங்களின் மூலமபெரும்உதவி அளித்து வந்துள்ள யுனெஸ்கோ நிறுவனம், நாம் ஏற்றுக் கொண்டபுத்துலகப்படைப்புப் பணியில் எக்காலத்திலும் நமக்குஉறு துணையாய் நின்று ஏற்ற உதவிகளைச் செய்ய முன்வரும் என்ற நம்பிக்கை எனக்குஉண்டு.

செனகல் குடியரசின் அதிபர் டாக்டர் செங்கோர் அவர்கள் திராவிட மொழி ஆராய்ச்சியில் ஆழ்ந்த ஈடுபாடும் தேர்ந்த புலமையும் பெற்றவர்கள். புகழ்பெற்ற கவிஞரும்கூட. அடுத்த உலகத் தமிழ் மாநாடு தம் நாட்டுத் தலைநகரான டக்கார் நகரில் நடக்க வேண்டுமென்று அவர்கள் அழைப்பு விடுத்திருந்தார்கள்.

### மதுரையில் உலகத் தமிழ் மாநாடு

அடுத்த உலகத்தமிழ் மாநாடு தமிழகத்தில சமயம் வளர்த்த மதுரையம்பதியில் 1981-ம் ஆண்டு ஜனவரியில் கூட இருக்கிறது.

அம்மாநாட்டிற்கு யுனெஸ்கோவின் தலைவாஎன்ற முறையில தாங்களும் தமிழில்மிகுந்த ஈடுபாடு கொண்ட செனகல் நாட்டு அதிபா டாக்டா செங்கோரும் கலந்து கொள்ள வசதிப்படும் என்று நான் எதிர்பார்க்கிறேன்.

### தமிழ் தியாகி ம.பொ.சி.

தங்களை வரவேற்கும் இந்த விருந்தில் ம.பொ.சி அவர்களும் கலந்து கொள்வது எனக்கு பெருமகிழ்ச்சியை அளிக்கின்றது.

ம. பொ. சி அவர்கள் மேலவைத் தலைவர் மட்டுமல்ல,

தாய்நாட்டின் விடுதலை போராட்டத்தில் முன்னணியில் நின்றவர், தாய் நாட்டுக்காகவும், தமிழுக்காகவும் பல தியாகங்களைச் செய்தவர், தொடர்ந்து செய்து வருபவர்.

அவர் இந்த விழாவில் கலந்து கொள்வது மிகவும் பொருத்தமானதாகும்.

### அண்ணா வழியில் நாங்கள்...

தமிழ்மொழியில் பேரார்வமும் நீங்காப்பற்றும் கொண்ட தமிழ் மக்கள் உயர்வடைய வழிகாட்டியவர் எங்கள் தலைவர் பேரறிஞர் அண்ணா ஆவார்கள்.

தமிழ் அன்பையும் தமிழ் உணர்வையும், அவா நாட்டுக்குக் காணிக்கையாக்கி அதிகாரப் பொறுப்பை ஏற்றவர்.

அவர் வழியில் நாங்கள் நடக்கின்றோம் என்று சொல்வதில் பெருமை கொள்கிறோம்"

இன்று இந்த அரசு செயல்படுத்தி வரும் முற்போககான திட்டங்கள் பேரறிஞர் அண்ணா எங்களுக்கு வகுத்துத் தந்தவை.

பேரறிஞர் அண்ணா காட்டிய பாதையில் நாங்கள் உறுதியாக நின்று மக்கள் நல்வாழ்வுக்காகப் பாடு பட்டு வருகின்றோம்.

புதிய சமுதாயத்தை உருவாக்க அறிவியல் முறைக்கு ஏற்ப தொண்டாற்றி வரும் யுனெஸ்கோவிற்கும், தொன்று தொட்டே உலகப் பொறுமையைப் போற்றி வந்துள்ள பாரம்பரியப் பெருமையைக் கொண்ட தமிழகத்திற்கும் நெருங்கிய நிலையான உறவும் அந்த அடிப்படையில ஒத்துழைப்பும் ஏற்படுவதற்கு தங்கள் வருகை ஒரு முன்னோடியாக அமையும் என்று கருதுகிறேன.

அந்த உறவு மலர்ந்து வளர்ந்து உலகே அதனால் பயன்பெறும் நாள் வெகு விரைவில் வரும் என்று எதிர்பார்க்கிறேன்.

மீண்டும் தங்களுக்கு இனிய வாழ்த்துக்களைக் கூறி, தங்கள் வரவு நல்வரவாகுக. நம்உறவு தழைத்து ஓங்குக என்று வாழ்த்துகிறேன்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவா கூறினார்.

பின்னர் முதல்வர் கௌரவித்தமைக்கு டாக்டர் பவ் நன்றி தெரிவித்து பேசினார்.

தமிழ்நாட்டில் தமது குறுகிய கால சுற்றுப்பயணத்தின் போது முதல்வர் அளித்த அன்பான வரவேற்பிற்கு நன்றிதெரிவித்தார், டாக்டர் பட்டம் அளித்து கௌரவித்த சென்னை பல்கலைக்கழகத்திற்கும் நமது நன்றியறிதலைத்தெரிவித்துக்கொண்டார் டாக்டர் பவ்.

### தமிழக அரசுக்குப் பாராட்டு

மேலும் யுனெஸ்கோ டைரக்டர் ஜெனரல் பேசுகையில் தமிழ்நாட்டில் கல்வி, கலாச்சார மேம்பாட்டுக்கென அரசு ஆற்றிவரும் பணிகளை பாராட்டினார். தமிழ் மொழியின் தொன்மையையும், வளமையையும், பண்பாட்டையும் மிகவும் புகழ்ந்துரைத்தார். இயன்ற எல்லாவித உதவிகளையும் தமிழ்நாட்டிற்கு யுனெஸ்கோ செய்யும் என்றும் உறுதி அளித்தார்.

விருந்துக்குப்பின் நாமகிரிப்பேட்டை கிருஷ்ணன், சீர்காழி கோவிந்தராஜன், மற்றும்அரசு நர்த்தகி செல்வி சுவர்ணமுகி ஆகியோரின் கலைநிகழ்ச்சிகள் நடந்தன, அமைச்சர்கள், பல்கலைக்கழக துணை வேந்தர் மற்றும் முன்னணி கலைஞர்கள் விருந்தில் கலந்துகொண்டனர்.

### வரதன் திருமணம்

சென்னை, ஆக. 20- கழகத்தோழரும 112வது வட்ட அண்ணா நினைவு மன்றத் துணைத் தலைவருமான டி வி வரதனுக்கும் பத்மாவதிக்கும் நாளை கே கே நகர் சிவலிங்கபுரம் 87வது தெருவில் திருமணம் நடக்கிறது

அப்துல்ரசாக் எம் எல் ஏ ராமகிருஷ்ணராபு, துரை அரசன், எம ஏழுமலை ஆகியோர் வாழ்த்துப் பேசுவார்கள்.

## எம். பி. சுப்பிரமணியம் பேச்சுக்கு மாநிலங்களவையில்

# கழக உறுப்பினர் ஆர். ராமகிருஷ்ணன் கடும் கண்டனம்

### பொறுப்பற்ற முறையில் பேச வேண்டாம் என அறிவுறுத்த பிரதமரிடம்கோரிக்கை

புதுடெல்லி, ஆக. 20- "மத்திய- மாநில உறவுகளுக்கு கேடு விளைவிக்கும் வகையில் எம். பி. சுப்பிரமணியம் போன்ற தமிழக இந்திரா காங்கிரஸ் தலைவர்கள் பேசி வருவதை பிரதமர் இந்திராகாந்தி தடுக்க வேண்டும்' என மாநிலங்களவையில் கழக உறுப்பினர் ஆர். ராமகிருஷ்ணன் கூறினார்.

இப்படிப்பட்ட பொறுப்பற்ற பேச்சுகளை பேசுவது தவறுஎன அவர்களுக்கு அறிவுறுத்த வேண்டும் எனவும் ராமகிருஷ்ணன் கேட்டுக் கொண்டார்.

மாநிலங்களவையில் உள்துறை இலாகாமீதான விவாதத்தில் கழக உறுப்பினர் ஆர். ராமகிருஷ்ணன் கலந்து கொண்டு பேசினார்.

அசாம் உத்திரபிரதேசத்தில் மொராதாபாத் போன்றஇடங்களில் நடைபெறும் வன்முறை சம்பவங்களை ஒடுக்குவதற்கு அரசு மேற்கொண்ட நடவடிக்கைகள் குறித்து இவ்விவாதத்தில் பேசப்பட்டது.

ஆர். ராமகிருஷ்ணன் பேசுகையில் கூறியதாவது:

வன்முறைச் சம்பவங்கள் எங்குஎந்தப் பகுதியில் நடந்தாலும் அவற்றை அடக்கி மக்களுக்கு பாதுகாப்பு அளிக்க வேண்டியது அரசின் கடமை.

அந்த வகையில் பிரதம மந்திரியின் மத்திய உள்துறை அமைச்சகம எடுத்த நடவடிக்கைகளை வரவேற்கிறேன்,

எந்த ஒரு மாநில அரசும் தன் மாநில மக்களுக்கு வன்முறையாளர்களிடம் இருந்து பாதுகாப்பு அளிக்க சட்டம் ஒழுங்கு அமைதியை நிலைநாட்டுவது அந்த மாநில அரசுகளின் பொறுப்பும் கடமையும் ஆகும். அப்படி நடவடிக்கை எடுத்ததற்காக அந்த மாநில முதலமைச்சரோ அல்லது மத்தியஉள்துறை அமைச்சரோ பிரதம மந்திரியோ பதவி விலகவேண்டுமென கோருவதோ பேசுவதோ அறிவுடைமை ஆகாது.

அரசியல்ஆதாயத்தையே இப்படிப்பட்ட பேச்சுகள் வெளிப்படுத்துவதாக அமையும். இப்படிப்பட்ட பேச்சுக்களை நான் சார்ந்துள்ள கட்சி ஆதரிக்கவில்லை. அதே நேரததில் பிரதம மந்திரிக்கு ஒன்றை வலியுறுத்தி நினைவுப்படுத்த விரும்புகிறேன். தமிழ்நாட்டில் அவரது கட்சித்தலைவராக உள்ள எம் பி சுப்பிரமணியம் அங்கு மக்களின் பெரும்பான்மை ஆதரவைப் பெற்று அமைந்துள்ள அரசை அச்சுறுத்தும் வகையில் ஆட்சி டிஸ்மிஸ் செய்யப்படும் என பேசுவது மிகவும் வருந்தத்தக்கது.

இப்படிப்பட்ட பொறுப்பில்லாத பேச்சுகளினால் மத்தியமாநில அரசுகளுக்கு இடையேயான நல்லுறவுக்குபங்கம்ஏற்படக்கூடும்.

எனவே பிரதம மந்திரி இதைக் கவனத்தில்கொண்டு இப்படி பொறுப்பில்லாமல் பேசவேண்டாம் என எம். பி. சுப்பிரமணியம் போன்ற காங்கிரஸ் தலைவாகளுக்கு அறிவுரை வழங்கவேண்டும்,

இவ்வாறு ஆர் ராமகிருஷ்ணன் பேசினார்.

ராமகிருஷ்ணன் பேசிய போது பிரதமா இந்திரா காந்திசபையில்இருந்தார்.

### வெற்றி விழா பொதுக்கூட்டம்

இடம்: திருவரங்கம் சத்தார வீதி

நாள்: 21-8-80 மாலை 7 மணி

பேசுவோர்: ஆணையூர் இஸ்மாயில், நாஞ்சில் புதுமையாளன், பி டி ராகவன் மற்றும் பலா.

நன்றியுரை எஸ் கனகராஜ்

## திருச்சிக்கு 2 முதல் பரிசுகள்: தமிழக பரிசு சீட்டு குலுக்கல்

சென்னை ஆக. 20 இன்று நடந்த தமிழக பரிசு சீட்டு குலுக்கலில் திருச்சி மாவட்டத்துக்கு 2முதல் பரிசுகள் கிடைத்தன.

தமிழக அரசு பரிசுச் சீட்டு குலுக்கல் சென்னை ராஜாஜி மண்டபத்தில் இன்று நடந்தது.

பரிசு பெற்ற எண்கள் விவரம் வருமாறு:

**FG. வரிசை**

முதல் பரிசுகள்
தலா ரூ. 50 ஆயிரம்
574945 (கரூா)
594862 (சென்னை)

2-வது பரிசு
தலா ரூ 10 ஆயிரம்
645620 (சங்கரன் கோயில்)
553777 (தென்காசி)
376810 (தூத்துக்குடி)

3வது பரிசு
தலா ரூ 5 ஆயிரம்
103791
243906
264130
57957

841635

**"FH" வரிசை**

முதல் பரிசுகள்
தலாரூ50 ஆயிரம்
396605 (அம்பாசமுத்திரம்)
878423 (குளித்தலை)

2வதுபரிசுகள்
தலா ரூ 10 ஆயிரம்
721193 (கர்னாடகமாநில விற்பனை)
594743 (திருச்சி)
365347 (நாமக்கல்)

3 வது பரிசுகள்
தலா ரூ 5 ஆயிரம்
536463 805739 989878
701690 348587

# நரிக்குறவர்களின் குறைகளை நேரில் கேட்டறிந்து முதல்வர் புரட்சித்தலைவர்

# உடனடி நடவடிக்கை

## ஏழை - எளிய மக்களின் தளநாயகனுக்கு செஞ்சியில் உற்சாகமான வரவேற்பு

விழுப்புரம், ஆக. 20- ஏழை-எளிய மக்களின் தள நாயகனை முதல்வர் புரட்சித்தலைவர் செஞ்சியில் நரிக்குறவர்களின் குறைகளை கேட்டறிந்து அவர்களின் குறைகளை தீர்க்க உடனடி நடவடிக்கை எடுக்க அதிகாரிகளுக்கு உத்தரவிட்டார்.

சில தினங்களுக்கு முன்பு செஞ்சியில் கோட்டை முன்பு நரிக்குறவர்கள் குடி இருக்கும் பகுதியில் ஒரு நரிக்குறவ பெண் சம்பந்தமாக ஏற்பட்ட தகராறில் சிலர் தாக்கியதால் நரிகுறவர்களில் 14 பேருக்குக் காயம் ஏற்பட்டது, சில நரிக்குறவர் குடிசைகளுக்குத் தீ வைக்கப்பட்டது. இதுகுறித்து செஞ்சி போலீசார் 12 பேர்களை கைது செய்துள்ளனர்.

இச்சம்பவம்சம்பந்தமாக முதல்வர் புரட்சித்தலைவரிடம் நரிக்குறவர்கள்மகஜர் அளித்தனர்.

### நேரில் விசாரணை

இதையடுத்து முதல்வர் புரட்சித்தலைவர் செஞ்சியில் நரிக்குறவர்களிடம் நடந்த சம்பவம்குறித்தும் மற்றும் நரிக்குறவர்களின் குறைகள் குறித்தும் கேட்டறிந்தார்.

அப்போது முதல்வர் புரட்சித்தலைவரிடம் நரிக்குறவர்கள் பல மனுக்களை அளித்தனர்.

நரிக்குறவர்கள் அளித்த மனுக்கள்மீது உடனடியாக தக்க நடவடிக்கை எடுக்க அதிகாரிகளுக்கு முதல்வர் புரட்சித்தலைவர் உத்தரவிட்டார்.

ஏழை எளிய மக்களான நரிக்குறவர்களின் குறைகளைக் கேட்டறிந்து அவற்றைத் தீர்க்க உடனடி நடவடிக்கை எடுத்த புரட்சித்தலைவருக்கு 2 ஆயிரத்திற்கும் மேற்பட்ட நரிக்குறவ மக்கள் முன்னதாக உற்சாக வரவேற்பு அளித்தனர். நரிக்குறவர்கள் முதல்வர் புரட்சித்தலைவருக்கு பாசி மாலையும, மயில் இறக்கைகள் கொண்ட மாலைகளையும் அணிவித்தார்கள்.

நரிக்குறவர் ஒருவரின் குழந்தைக்கு முதல்வர் புரட்சித்தலைவர் 'பாபு' எனப் பெயரிட்டார்.

### திருமணம்

முதலவர் புரட்சித்தலைவர் முன்னிலையில், நரிக்குறவாராயா-இளையராணி திருமணம் நடந்தது. முதலவர் புரட்சித்தலைவர் மணமக்களைவாழ்த்தினார்.

---

வெளிநாட்டு சுற்றுப்பயணம் முடிந்து

## நிதியமைச்சர் நாவலர் நாளை சென்னை திரும்புகிறார்

சென்னை. ஆக. 20- வெளிநாட்டு சுற்றுப்பயணத்தை முடித்துக் கொண்டு நிதியமைச்சர் டாக்டர் நாவலர் (நாளை) வியாழன் இரவு 10-10 மணிக்கு விமானம் மூலம் சென்னை திரும்புகிறார்.

மோரீஸ் நாட்டில் நடந்த தமிழ்ப்பண்பாட்டு மாநாட்டில் கலந்துகொள்வதற்காக நிதியமைச்சர் டாக்டர் நாவலர் இம் மாதம் 2ஆம்தேதி தனது வெளிநாட்டுப் பயணத்தைத் துவக்கினார்.

மொரீசியஸ் பிரதமர் ராம்கூலம் தொடங்கி வைத்ததமிழ்ப்பண்பாட்டு மாநாட்டில் கலந்துகொண்டு தமிழர் நாகரிக வளர்ச்சிக்கு கலைபண்பாட்டின் தொடர்பு என்ற தலைப்பில் நாவலர் சிறப்புரை யாற்றினார்.

இந்த மாநாட்டில் கல்வியமைச்சர் அரங்கநாயகம் கலந்துகொண்டார்.

மோரீஸ் நாட்டில் சுற்றுப்பயணம் செய்த பிறகு 5-ம் தேதியன்று பிரான்சு நாட்டுத் தலைநகர் பாரிசுக்கு டாக்டர் நாவலர் சென்று அங்கு பல்வேறு நிகழ்ச்சிகளில் கலந்துகொண்டார்.

பின்னர் இங்கிலாந்து சென்றார் லண்டனில் வாழும தமிழர்கள் அவருக்குப் பெரும வரவேற்பளித்தனர்.

அங்கு அமைச்சர்களுடனும் அதிகாரிகளுடனும் நாவலர் பேச்சு வார்த்தை நடத்தினார். லண்டன் வானொலிக்கு பேட்டி அளித்தார். அங்கிருந்து இத்தாலி, கிரீஸ் ஆகிய நாடுகளுக்குச் சென்றார்.

சுற்றுப் பயணத்தை முடித்துக் கொண்டு பம்பாய் வழியாக (நாளை) வியாழன் இரவு 10-10 மணிக்கு விமானம் மூலம் சென்னை திரும்புகிறார்.

பம்பாயில் அவரை வரவேற்கக் கழகத் தோழர்கள் ஏற்பாடுகளைச் செய்துள்ளனர்.

சென்னையில் டாக்டர் நாவலரை வரவேற்கச் சிறப்பான ஏற்பாடுகளைச் செய்துள்ளனர்.

---

## புரட்சித்தலைவருக்கு அமெரிக்க தமிழர்கள் சார்பில் வாழ்த்து

சென்னை, ஆக. 20 புரட்சித் தலைவரைச் சந்தித்து சட்டசபைத் தேர்தலில் கழகம வெற்றி பெற்றதற்கு அமெரிக்கா வாழ் தமிழர்கள் சார்பில் நியூயார்க் தமிழ் கலாச்சார சங்கத் தலைவர் டாக்டர் ரகுநாத் பாராட்டும வாழ்த்துக்களும் தெரிவித்தார்.

டாக்டர் ரகுநாத்தும், அவரது துணைவியார் பாரதி ரகுநாத்தும் சென்னை வந்து முதல்வர் புரட்சித் தலைவரைச் சந்தித்தனர்.

சட்டசபைத் தேர்தலில் கழகம் அமோக வெற்றியடைந்ததைக் கண்டு அமெரிக்கா மற்றும் கனடாவில் உள்ள தமிழ் மக்கள் மட்டற்ற மகிழ்ச்சி அடைந்ததாகவும், ஹூஸ்டன், பாஸ்டன், சிக்காகோ டொரன்டோ, பிலடெல்பியா ஆகிய நகரங்களில் உள்ள தமிழ் குழுக்களின் சார்பில்புரட்சித் தலைவருக்குவாழ்த்துக்களைக் கொண்டு வந்து தெரிவிப்பதாகவும் புரட்சித்தலைவரிடம் டாக்டர் ரகுநாத்கூறினார்.

புரட்சித்தலைவர் நியூயார்க் சென்றிருந்தபோது நியூயார்க் தமிழ்க்கலாச்சார சங்கத்தைத துவக்கி வைத்தார்.

---

திருமுடிவாக்கம்

## கழகத் தோழர் மீது தாக்குதல்: தி.மு.க.வினர் ரகளை

சென்னை, ஆக 20 திருமுடிவாக்கம் கழகத் தோழர்கள் ராஜமாணிக்கம் ஏழுமலை ஜெகதீசன் ஆகியோர் திருநீர்மலை சென்று விட்டு திரும்பி வந்து கொண்டிருந்தனர் அப்போது செல்லேரியில் தி மு க காலிகள் சிலர் அவர்களை வழி மறித்துத் தாக்கினர்கள்.

ராஜமாணிக்கம் என்ற கழகத் தோழரை திமுக குண்டர்கள் கொடூரமாகத் தாக்கினர்.

வயிற்றிலே அடித்து அப்படியே போட்டுவிட்டுச் சென்று விட்டனர்.

சம்பவம் பற்றி அறிந்த கழகத் தோழர்கள் ராஜமாணிக்கத்தை குரோம்பேட்டை மருத்துவமனையில் சேர்த்தனர்.

இது சம்பந்தமாகப் போலீஸ் நிலையத்தில் புகார் செய்யப்பட்டுள்ளது.

---

## விவேக் அண்டு கம்பெனி: புதிய ஷோரூம் திறப்புவிழா

சென்னை, ஆக, 20- சென்னை நகர மக்களுக்கு கடந்த 15 ஆண்டுகளாக தவணைமுறையில் பொருட்களை சிறப்பான வகையில் அளித்து வரும் விவேக் அண்டு கம்பெனியார், தங்களது புதிய விற்பனை அரங்கை தியாகராய நகரில் நாளை துவங்குகின்றனர்.

மூன்று மாடிக் கட்டிடத்தில் அமைந்துள்ள இந்த விற்பனை அரங்கில் வீட்டிற்கு தேவைப்படும் அத்தியாவசியமான பொருட்களான மின் சாதனங்கள், மின் விசிறிகள், ரேடியோக்கள், டேப் ரிகார்டர்கள், டெலிவிஷன், ஸ்டீல் பீரோக்கள் முதலியன சுலபமான தவணை முறையில் விற்பனைக்கு கிடைக்கும்.

இப்புதிய விற்பனை அரங்கை 21ம்தேதி காலை 10மணிக்கு பம்பாய் சுமீத் நிறுவனத்தின் தலைவர் மாதுர் மாதுர் திறந்து வைக்கின்றார்.

இந்தத்தகவலைகளைசந்திர சேகரும், கோதண்டராமனும் தெரிவித்தனர்.

---

(8-ம் பக்கம் தொடர்ச்சி)

பணம் ஒதுக்கவேண்டும் என்றும் கேட்டுக் கொள்கின்றேன்.

பர்கூர் தொகுதியில் சாலை வசதிகள் அடியோடு கிடையாது. இணைப்புச் சாலைகளே இல்லை. ஆகவே இந்த ஆண்டாவது என்னுடைய தொகுதிமக்களுக்கு சாலை வசதிகளை செய்து கொடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

இவ்வாறு பர்கூர் ராமசாமி பேசினார்.

Published by K. Ravindran on behalf of Thangamani Publications. 275, Avvai Shanmugam salai, Madras-14 and printed by him at Print House, 1, First Main Road, United India Colony, Madras-24. Editor: E. PARASURAMAN.

---

## பர்கூர் தொகுதியில் இணைப்பு சாலை வசதி: துரைசாமி கோரிக்கை

சென்னை, ஆக, 20 தர்மபுரிமாவட்டம் பர்கூர் தொகுதியில் இணைப்பு சாலை வசதிகளை அதிக அளவில் செய்து தருமாறு சட்டசபையில் பேசுகையில் பர்கூர் தொகுதி கழக சட்டசபை உறுப்பினர் ராமசாமி கோரினார்.

சட்டசபையில் மானியக் கோரிக்கை மீதான விவாதத்தில் பங்கேற்றுப் பேசுகையில், பர்கூர் தொகுதி கழக உறுப்பினர் பி.எஸ். துரைசாமி கூறியதாவது:

பழங்குடிமக்களின் நலனுக்காக 2468.84 லட்சம் ரூபாய் இந்த மானியக் கோரிக்கையில்ஒதுக்கப்பட்டிருப்பது வரவேற்கத் தக்கது.

மேலும் பழங்குடிமக்கள் பின் தங்கி இருப்பதால் அதிக நிதி ஒதுக்கித்தருவதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன், எங்களுடைய பகுதியில் மலை ஜாதியினருக்கு அதிகமாக வீட்டு வசதி கிடையாது.

ஆகவே அந்த மலைஜாதி மக்களுக்கு ஒருஇடத்தைக் கொடுத்து அவர்களுக்குத் தகுந்த வீடுகளைக் கட்டிக் கொள்வதற்கு அனுமதிக்கும்படி இந்த அரசை கேட்டு கொள்கிறேன்.

அடுத்து மாத்தூர் பகுதியில் பாம்கோலா என்ற தொழிற் சாலை தொடங்குவதற்கு 23 இலட்சம் ரூபாய் அனுமதி கொடுத்தும் இதுவரையில் அந்தத் தொகுதியில் வேலை தொடங்கப்படவில்லை. அந்தத் தேவையை உடனடியாகத் தொடங்கி அந்தப் பகுதி மக்களுக்கு வேலை வாய்ப்பு தரும்படி கேட்டுக் கொள்கிறேன்.

மேலும் பர்கூரில் சப். ரிஜிஸ்தரார் அலுவலகம் அமைக்க வேண்டும். வெகுகாலமாக கோரி இருந்தும் இதுவரையில் வரவில்லை என்பதை மிகுந்த வருத்தத்துடன் தெரிவித்துக் கொண்டு, இந்த பர்கூர் எல்லாத் தகுதியும் உள்ள இடமாக இருப்பதால் அந்த இடத்திலே அந்த அலுவலகம் அமைக்குமாறு கேட்டுக் கொள்கிறேன்.

### விவசாயிகள் பயனடைய

அடுத்து என்னுடைய மாவட்டத்தில் திராட்சைத் தோட்டங்கள் அதிகமாக இருக்கின்றன. திராட்சை பயிரிடுவதற்காக ஒவ்வொரு ஏக்கருக்கும் 15 ஆயிரம் ரூபாய் வங்கிகளிலிருந்து கடன் பெற்று திராட்சைத் தோட்டம் போடப்பட்டிருக்கின்றது. இவ்வாறு திராட்சைத் தோட்டம் அங்கே அதிகப்படுத்தப்பட்டிருக்கின்றது அதை விற்பதற்காக அவர்கள் ஆந்திராகேரளாகர்நாடக போன்ற இடங்களுக்குச் செல்ல வேண்டி இருக்கின்றது. அங்கே ஒயின் எடுப்பதற்காக அந்தப் பழங்களைக் கொடுக்கிறார்கள், ஆனால் அப்படிப்பட்ட ஒயின் பேக்டரியை இங்கேயே அமைத்தால் ஆயிரக்கணக்காக விவசாயிகள் பயன் அடைவார்கள்என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன் அவ்வாறு அங்கே பேக்டரி அமைப்பதற்கு உடனடியாக ஏற்பாடு செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்து பர்கூர் பகுதியில் பனை மரங்கள் அதிகமாக இருக்கின்றன. ஆகவேவெல்லம் செய்கின்ற சொசைட்டிகளை அங்கேஅதிகப்படுத்த வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன் மேலும் குடிசைத் தொழில்களுக்கு முக்கியத்துவம் தருகின்ற வகையில் அதிகமாகப்

(6-ம்பக்கம் பார்க்க)

---

தலைமைக் கழக அறிக்கை எண்: 92.80

## சென்னை மாநகரத் தோழர்களுக்கு...

சைதை தொகுதியில் 143, 144-வது வட்ட அமைப்பாளர்களான

1. மா. புனிதவேலு
2. டி. திருநாவுக்கரசு

ஆகிய இருவரும் வட்ட அமைப்பாளர் பொறுப்புக்கான பணிகளைச் சரிவர நிறைவேற்றாத காரணத்தால் வட்ட அமைப்பாளர்கள் பொறுப்பிலிருந்து விடுவிக்கப்படுகிறார்கள். மாற்று அமைப்பாளர்கள் நியமிக்கப்படும் வரை 143, 144-வது வட்ட அமைப்புக்கான பணிகளைத் தொகுதி அமைப்பாளர் கவனித்து வருவார்.

சைதை தொகுதியைச்சார்ந்த 142-வது வட்டத்தைச்சார்ந்த புரட்சித்தலைவர் பொதுநல மன்றச் செயலாளர் ஆர். எஸ். மணி, அறிஞர் அண்ணா பொதுப்பணி மன்றச்செயலாளர் எம். சண்முகம் ஆகிய இருவரும் கழகச் சட்ட திட்டங்களுக்கும் விதிமுறைகளுக்கும் மாறாக நடந்து கழகத்தின் நற்பெயருக்குக் களங்கம் விளைவிக்கும் முறையில் செயல்பட்ட காரணத்தால் கழகத்தின் சாதாரண உறுப்பினர் பொறுப்பு உட்பட அனைத்துப் பொறுப்புகளிலிருந்தும் இன்று முதல் நீக்கிவைக்கப்படுகிறார்கள்.

மாண்புமிகு புரட்சித்தலைவர் அவர்களின் ஒப்புதலோடும் பொதுச்செயலாளர் ப. உ. ச அவர்களின் அனுமதியுடனும் இவ்வறிக்கை வெளியிடப்படுகிறது.

எச் வி ஹண்டே
அமைப்புச் செயலாளர்

சென்னை-14
20-8-1980

---

## கழக உறுப்பினர் அட்டை வழங்குதல்

கீழ்க்கண்ட ஊர்களுக்குச் சம்பந்தப்பட்ட அமைப்பாளர்கள் முகவர்க்கு உறுப்பினர் அட்டைகள் அஞ்சல் மூலமாக அனுப்பிவைக்கப்பட்டுள்ளன,

அமைப்பாளர்கள் உறுப்பினர் அட்டைகளைமுறையாக கழக உறுப்பினர்களுக்கு உடனடியாக வழங்கிட வேண்டும்.

உறுப்பினர் அட்டைகள் வழங்குவதில் எவ்விதக் குறைபாடுகளும் இல்லாமல் செயல்படுவது அமைப்பாளர்களின் பொறுப்பாகும். வழங்க மறுத்தால் அமைப்பாளர்கள் மீது கடுமையான முறையில் ஒழுங்கு நடவடிக்கை எடுக்கப்படும் உறுப்பினர்கள் ஒவ்வொருவரும் உறுப்பினர் அட்டையைப் பாதுகாப்பாக வைத்திருக்கவேண்டும்.

உறுப்பினர் சேர்க்கப்பட்டுள்ள உறுப்பினர் தாள்களையும் உரிய தொகையையும் உடனடியாக தலைமை நிலையத்திற்கு அனுப்பிவைக்குமாறு பொறுப்பானவர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

எம். எஸ். அப்துல்காதர்
தலைமை நிலையச் செயலாளர்:

### செங்கை மாவட்டம்

அம்பத்தூர் சென்னை 53 - எஸ் எ தஸ்தகீர்
அம்பத்தூர் சென்னை 53 - எஸ் வி குப்புசாமி
அம்பத்தூர் சென்னை 53 - அம்பத்தூர்திருவேங்கடம்
அம்பத்தூர் சென்னை 53 - பெ சகாதேவன்
மணலி சென்னை 68 - மு செந்தில்வேலன்
அம்பத்தூர் சென்னை 58 சாம்பசிவன்
அம்பத்தூர் சென்னை 53 - ஆர் தாமோதரன்
திருவள்ளூர் டி கே செங்கை - எஸ் சம்பத்
திருவள்ளூர் டி கே செங்கை - டி ஜெயராமன்
திருவள்ளூர் டி கே செங்கை - பகவான்தாஸ்
பொன்னேரி டி கே செங்கை - அ முனுசாமி
பொன்னேரி டி கே செங்கை - து மூனுசாமி
பொன்னேரி டி கே செங்கை எஸ் என் ராஜா
பொன்னேரி டி கே செங்கை - ஏ ஆறுமுகம
பொன்னேரி டி கே செங்கை - அர பரிமேலழகன்
பொன்னேரி - டி கே செங்கை டி கோபால்
பொன்னேரி டி கே செங்கை - ராமசாமி
திருத்தணி டி கே செங்கை - பி சி முனுசாமி
திருப்பெரும்புதூர் - டி கே செங்கை - கோ ராதாகிருஷ்ணன்
திருத்தணி டி கே செங்கை - க மனோகர்
திருத்தணி டி கே செங்கை - எம் முனிகிருஷ்ணன்
திருத்தணி டி கே செங்கை - பி எம் நரசிம்மன்
திருத்தணி டி கே செங்கை - எம் கே கண்ணப்பன்
திருப்பெரும்புதூர் டி கே செங்கை - பி சுப்பிரமணி
திருத்தணி டி கே செங்கை - எஸ் எம் சம்பத்
திருத்தணி டி கே செங்கை - முனிரத்தினம்நாயுடு
மதுராந்தகம் - எம் ஆர் ஆறுமுகம்
உத்திரமேரூர் - எஸ் விஷ்ணுதாசன்
மதுராந்தகம் - பி ஜி கணேசன்
உத்திரமேரூர் - டி இ யூசுப்
உத்திரமேரூர் - ஜே நரசிம்மலு
உத்திரமேரூர் - கே சொக்கலங்கம்
உத்திரமேரூர் - கே நாராயணசாமி
காஞ்சிபுரம் - டி எஸ் லோகநாதன்
மதுராந்தகம் - வீ சி சிதம்பரம்
மதுராந்தகம் - சி என் ஜானகிராமன்
மதுராந்தகம் - எஸ் வேல்முருகன்
மதுராந்தகம் - கே பாலசுப்ரமணியன்
மதுராந்தகம் - கே அப்பாதுரை
மதுராந்தகம் - எஸ் டி உக்கம்சந்த்
மதுராந்தகம் - கே ஜெயராமன்
மதுராந்தகம் - கே சடையன்
மதுராந்தகம் - ஜி மணிதாசன்
மதுராந்தகம் - சே மா முத்து
மதுராந்தகம் - டி முனியாண்டி
மதுராந்தகம் - டி அன்புரோஸ்
மதுராந்தகம் - எம் ராமதாஸ்
மதுராந்தகம் - எஸ் முனிகிருஷ்ணன்
மதுராந்தகம் - எம் ராதாகிருஷ்ணன்
மதுராந்தகம் - எம் வி குமாரசாமி
மதுராந்தகம் - ஆர் தாண்டவராயன்
மதுராந்தகம் - மாணிக்ககவுண்டர்
திருக்கழுக்குன்றம் - தி மனோகரன்
கடும்பாடிகிராமம் - என் பூபதி
பொ வி களத்தூர்காலனி - வி தர்மலிங்கம்
231 நென்மேலி கிராமம - என் ஆர் ராமகிருஷ்ணன்
இரும்புலிச் சேரி கிராமம் - கே சோலையப்பன்
திருக்கழுக்குன்றம் - தி க நடராசன்
திருக்கழுக்குன்றம் - எம் அருணசலம்
பாண்டூர் 188 - ஆர் ராமலிங்கம்
பரமசிவநகர் - இ குப்பன்
திருக்கழுக்குன்றம் - பி வி வேதகிரி
பட்டைக்கழனி - கே பொன்னுசாமி
பொன்னேரி - சி சுப்பிரமணியன்
பொன்னேரி - ஏ டி சந்தானம்
பொன்னேரி - பி வசந்தன்
பொன்னேரி - வி தயாளன்
பொன்னேரி - தருமதுரை
திருப்பெரும்புதூர் - வை இரா குப்புசாமி
திருப்பெரும்புதூர் - என் மகேந்திரன்
காஞ்சிபுரம் - டி கே வீரராகவன்
காஞ்சிபுரம் - பி குப்புசாமி
காஞ்சிபுரம் - எம் கே வரதராசன்
காஞ்சிபுரம் - கே வரதன்
சின்னகாஞ்சிபுரம - எ கிருஷ்ணமூர்த்தி
திருவள்ளூர் - எம் ஜெயராமன
காஞ்சிபுரம் - எம் ஆறுமுகம
காஞ்சிபுரம் - மா அரங்கநாதன்
காஞ்சிபுரம் - எஸ் முனியப்பன்
திருவள்ளூர் - சி ராமதாஸ்
திருவள்ளூர் - வரதப்பரட்டி
திருவள்ளூர் - மு தயாளன்
திருவள்ளூர் - எஸ் துரை
திருவள்ளூர் - இ முனிசாமி
திருவள்ளூர் - கே குப்புசாமி
பாடியநல்லூர்சென்னை 52 - கோவி மாரியப்பன்
பூந்தமல்லி சென்னை - கே சாரங்கபாணி
பூந்தமல்லி சென்னை - இ பாலன்
அம்பத்தூர் சென்னை 53 - என் கண்ணாயிரம்
பாடி சென்னை 58 - பி ராமா
குரோம்பேட்டை சென்னை 44 - பி செல்வராஜ்
கோட்டூர் சென்னை 50 - கே இ மனோகரன்
குரோமபேட்டை சென்னை 44 - எம சி செல்வராசு
சைதை சென்னை 96 - கோ ரகுராமன்
குரோம்பேட்டை சென்னை 44 - அ வின்சென்ட்
கொரட்டூர் சென்னை 76 - எஸ் வேதாசலம்
அம்பத்தூர் குப்பம் சென்னை 58 - வி தர்மராஜன்

மற்ற மாவட்ட, தொகுதி, ஒன்றியங்களில் உள்ள கிளைகளுக்கு உறுப்பினர் அட்டைகள் அனுப்பப்பட்டு வருகின்றன.

அரசியல் தலைவர்கள்-
கலைஞர்கள் கருத்தோவியம்!
176 பக்கங்கள்
பல வண்ண முகப்பு
பக்கத்துக்குப் பக்கம்
படங்கள் விலை ரூ- 5/-
தபாலில் பெற ரூ- 6-25
புரட்சித்தலைவர்
எம்.ஜி.ஆர்
நாதை தருமன்
பேரறிஞர்
அண்ணா புதிப்பகம்
(கல்யாணி ஆர்ட் பிரஸ்)
17, ரங்கநாதன் தெரு, சென்னை-600017



# அண்ணா



தொலைபேசி: கடை 33213 இல்லம் 31922
நாம் நாடுவோர் தவறாமல் நாடுவது
தமிழக எண்ணெய்ப் பலகாரம்
தயாரிப்பு விற்பனை நிலையம்
திருப்பரங்குன்றம் சாலை, மதுரை 11
தனிச்சிறப்பு சிலேபி, தெக்கத்தி மிட்டாய், அதிரசம்,
இனிப்பு சேவு, பக்கவடா, மிக்சர், முறுக்கு, கடலை
நிலக்கடலையும் மற்றும் இனிப்பு காரவகைகள்
உரிமையாளர்
பே. தேவசகாயம்
கிளைகள்: 26, மேலமாசி வீதி, 70, சுவாமி சன்னதி
12, அழகர்கோவில் சாலை, 72, டவுன்ஹால் ரோடு, மதுரை.


## 119 பேர் இறந்த மொராதாபாத்துக்குள்

# எதிர்க்கட்சி தலைவர்கள் போவதற்குத் தடை

**புதுடெல்லி, ஆக. 20- உத்தரபிரதேச மாநிலத்தில் கலவரம் நடந்த மொராதாபாத்தில் நிலைமைகளைக் கண்டறியச் சென்ற எதிர்க்கட்சித் தலைவர்களுக்கு அனுமதி மறுக்கப்பட்டதாக மக்கள் கட்சித் தலைவர் சந்திரஜித் யாதவ் கூறினார்.**

உத்திரபிரதேசமாநிலத்தில் மொராதாபாத்தில் ஈத்பெருநாளன்று தொழுகை நடந்தபோது சிலர் பன்றியை ஓட்டி விட்டதால் கலவரம் மூண்டது தெரிந்ததே.

இந்தக் கலவரத்தினால் 119 பேர் இறந்தார்கள்.

அங்குள்ள நிலைமையைக் கண்டறிய மத்திய உள்துறை அமைச்சர் ஜெயில் சிங்கின் அனுமதி பெற்று எதிர்க்கட்சித் தலைவர்கள் சென்றனர்.

### போலீஸ் பாதுகாப்பு இல்லை

லோக்தளக் கட்சித்தலைவர்கள் சந்திரஜித்யாதவ், ஜார்ஜ் பெர்னாண்டஸ், உத்திரபிரதேச எதிர்க்கட்சித்தலைவர் ராஜீந்தர் சிங், ஏ ஹாஷ்மி, டாக்டர் ஏ யு அஸ்மி, சந்திரபால் சிங் ஆகியோர் மொராதாபாத்துக்குச் சென்றபோது நகருக்குள் நுழையக் கூடாது என்று மாவட்ட அதிகாரிகள் அவர்களைத் தடுத்து விட்டார்களாம்.

மொராதாபாத்தில்நிலைமையை அறிய எல்லா வசதிகளும் செய்து தரப்படும்என்று மந்திரிஜெயில் சிங் உறுதியளித்திருந்தும், பின்னர் தங்களுக்கு அனுமதி மறுக்கப்பட்டு விட்டதாக சந்திரஜித் யாதவ் கூறினார்.

மொராதாபாத்தை அடைந்ததும், கூடுதல் மாவட்ட மாஜிஸ்திரேட் தங்களைத் திருப்பி அனுப்பி விட்டதாகவும், தமக்கு (மாவட்ட மாஜிஸ்திரேட்) நிறைய வேலை இருப்பதால் எதிர்க்கட்சித் தலைவர்களுக்குத் தேவையான போலீசாரை அனுப்பி வைக்க இயலாது என்று அவர் மறுத்ததாகவும் சந்திரஜித்யாதவ் கூறினார்

### மொராதாபாத் நிலைமை

ஊரடங்கு உத்தரவுக்கு உள்ளான மொராதாபாத் நகரம் வெளியுலகத் தொடர்பிலிருந்து துண்டிக்கப்பட்டிருக்கிறது.

கடந்த 7 நாட்களாக அந்த ஊருக்குள் தபால் தந்தி பட்டுவாடா நடக்க வில்லை.

முக்கியஉணவு பொருட்களை அரசு வினியோகித்து வருகிறது.

---

தஞ்சையில்

### பெரியார் ஒலி- ஒளி காட்சி நீடிப்பு

தஞ்சை, ஆக, 20. தஞ்சாவூரில் தற்போது நடைபெற்றுவரும் தந்தை பெரியார் ஒலிஒளி அரங்கக் காட்சியினைபெருவாரியான மக்கள் பார்த்து வருகின்றனர். தமிழ்நாடு அரசின் சார்பில் செய்தி மக்கள் தொடர்புத் துறையால் ஏற்பாடு செய்யப்பட்டுள்ள இக்காட்சி இன்று (20 ந்தேதி) முடிவுறவேண்டும். ஆனால் பொதுமக்களின் வேண்டுகோளுக்கிணங்க இக்காட்சி 24ந் தேதிவரை நீடிக்கப்பட்டுள்ளது.

---

மாணவர்களும் புரட்சித்தலைவர் பக்கமே!

### கல்லூரி பேரவை தேர்தல்களில் கழக மாணவர்கள் வெற்றி

**மதுரை ஆக, 20 கல்லூரி மாணவர் பேரவைத் தேர்தல்களில் கழகமாணவர்கள் வெற்றி பெற்றனர்.**

மதுரை வக்பு வாரிய கல்லூரி பேரவை தேர்தலில் கல்லூரியின் கழக அணி செயலர் அ. சம்பத் பேரவை வெளி மாணவ செயலாளராகவும், கழக மாணவர் "டேனியல் தேவகுமார்" பேரவை பொருளாதாரத் துறை செயலாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

இவர்களை கல்லூரி முன்னாள் கழக அணித்தலைவர் ஆசைராசன் கல்லூரியின் முன்னாள் பேரவைத் தமிழ் மன்ற செயலர் சே. வெங்கடேசலு முன்னாள் வெளி மாணவ செயலர் எஸ். பாபு ஆகியோர் மாலை அணிவித்து பாராட்டி பேசினார்கள்.

பின்னர் கழக மாணவர்கள் அனைவரும் பேரறிஞர் அண்ணா, பகுத்தறிவுத் தந்தை பெரியார், பெருந்தலைவர் காமராசர் சிலைகளுக்கு மாலை அணிவித்து வாக்களித்த அனைவருக்கும் இனிப்பு வழங்கினார்கள்.

மதுரைமருத்துவக் கல்லூரி பேரவைத் தேர்தலில கழகமாணவர்கள் வெற்றிபெற்றனர்.

பேரவைத்தலைவராக இராமசாமியும் பேரவைத் துணைச்செயலாளராக சேக்தாவூதும். நுண்கலைக் குழு செயலராக பாலகுமாரும் மலர்க்குழு துணைச்செயலராக கபிலன் ஆகியோரும் அதிகப்படியான ஓட்டுகள் வித்தியாசத்தில் வெற்றிபெற்றனர்.

தேர்தல் முடிவுகள் அறிவிக்கப்பட்ட பின்னர் கழக மாணவர்கள் ஊர்வலமாகச் சென்று அண்ணா சிலைக்கு மாலையணிவித்தனர். தேர்தல் வேலைகளில் தீவிரமாக ஈடுபட்டு மாணவர்களுக்கு ஒத்துழைப்பையும், ஆதரவையும் தந்த மதுரை நாடாளுமன்றச் செயலாளர் பாலகுரு அவர்களுக்கு மதுரை மருத்துவகல்லூரி கழக மாணவர் தலைவர் இரா இராம்நாத் கல்லூரி முன்னாள்பொதுச் செயலாளர் சுப. தயாநிதி மற்றும் வெற்றிபெற்ற வேட்பாளர்கள் அனைவரும் மாலையணிவித்து ஆசிபெற்றனர்.

செய்யாறு அறிஞர் அண்ணா அரசினர் கலைக் கல்லூரியில் நடைபெற்ற கல்லூரி பேரவைத்தலைவர் தேர்தலில் கழக மாணவர் ஆர் ராமகிருஷ்ணன், அமோக வெற்றி பெற்றார். ஆர் ராஜேந்திரன் பேரவைச செயலாளராகவும், ஒய் சுகுமார் துணைச் செயலாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். அதனைத் தொடர்ந்து மாணவர் தலைவர் ஆர் ராமகிருஷ்ணன் தலைமையில் ஊர்வலம் நடைபெற்றது. ஊர்வலத்தின்போது காந்தி சிலைக்கும் அண்ணா சிலைக்கும் காமராஜர் சிலைக்கும் மாலை அணிவிக்கப்பட்டது. ஊர்வலத்தின் போது சுமார் ஆயிரத்திற்கும் மேற்பட்ட மாணவர்கள் கலந்து கொண்டனர். தொகுதி அமைப்பாளர் வி குப்புசாமி துணை அமைப்பாளர், கே. முருகன், கந்தசாமி, நகர அமைப்பாளர் எல். இஸ்மாயில், ஆகியோர் கலந்து கொண்டனர்.

---

## அம்மாப்பேட்டை ஒன்றியக் கூட்டம்

அன்புடையீர், வணக்கம்.

வரும் 22.8.80 வெள்ளிக்கிழமை மாலை 3 மணி அளவில் லியமங்கலம், பொதுப்பணித்துறை ஆய்வு மாளிகையில் ஒன்றிய கிளைக்கழக அமைப்பாளர்கள் கூட்டம் நடைபெற இருக்கிறது. அனைவரும் தவறாமல் வருகைதந்து சிறப்பிக்க வேண்டுகிறேன்.

இங்ஙனம்,
**துரை. கோவிந்தராஜன்**
மாவட்ட அமைப்பாளர்

---

## தமிழ்நாடு வீட்டு வசதி வாரியம்

தன்னிறைவு வீட்டு மனை வசதி கோட்டம் எண் 3
உலக வங்கி வட்டம்

### ஒப்பந்தப் புள்ளி அறிவிப்பு

செயற்பொறியாளர், தன்னிறைவு வீட்டு மனை வசதி, கோட்டம் எண் 3 அவர்களால் கீழ்கண்ட வேலைகளுக்கு ஒப்பந்தக்காரர்களிடமிருந்து மூடி அரக்கு முத்திரையிடப்பட்ட ஒப்பந்தங்கள், கோட்டம் எண் 3 தமிழ்நாடு வீட்டு வசதி வாரியம் பேருந்து பணிமனை அருகில் வியாசர்பாடி சென்னை 600039 என்ற விலாசத்திலுள்ள அலுவலகத்தில் 3, 4, & 5-9-80 மாலை 3.00 மணிவரை (அலுவலக கடிகாரப்படி) பெற்றுக் கொள்ளப்பட்டு அதே நாளில் 3-05 மணிக்குத் திறக்கப்படும்.

| வேலையின் பெயர் | முன்வைப்புத் தொகை | ஒப்பந்தநமூனாக்கள் கிடைக்கும் நாட்கள் | ஒப்பந்தநமூனாக்கள் பெற்றுக் கொள்ளப்படும் கடைசி நாள் |
|---|---|---|---|
| (1) கொடுங்கையூர் 3-ம் பாகத்தில் ஆரம்பப் பள்ளிக்கு மேற்கு, தென் மேற்கு பகுதியில் உள்ள பள்ளங்களைமண்ணால் நிரப்புதல் (KGR/DB/895/80) | ரூ. 1775 | 22-8-80 முதல் 2-9-80 வரை | 3-9-80 |
| (2) கொடுங்கையூர் 4-ம் பாகத்தில் 12, 13, 16, 17, 18, 22ம், 23, 20, 21-ல்உள்ளபள்ளங்களை மண்ணால் நிரப்புதல் (KGR/DB/893E/80) | ரூ. 1555 | 22-8-80 முதல் 2-9-80 வரை | 3-9-80 |
| (3) கொடுங்கையூர் 4-ம் பாகத்தில் 24 முதல் 35 வரையிலும் 38ல் உள்ள பள்ளங்களை மண்ணால் நிரப்புதல் KGR/DB/893D/80) | ரூ. 1390 | 22-8-80 முதல 3-9-80 வரை | 4-9-80 |
| (4) கொடுங்கையூர் 4-ம் பாகத்தில் உள்ள 36, 37, 39 முதல் 41 வரையும், 41-ம், 46லும் உள்ளபள்ளங்களை மண்ணால் நிரப்புதல் KGR/DB/893C/80 | ரூ. 1505 | 22-8-80 முதல் 3-9-80 வரை | 4-9-80 |
| (5) கொடுங்கையூர் 4-ம் பாகத்தில் 14, 15, 42. 43, 44, 50, 51-ல்உள்ள பள்ளங்களை மண்ணால் நிரப்புதல் KGR/DB/893B/80 | ரூ. 1575 | 22-8-80 முதல் 4-9-80 வரை | 5-9-80 |
| (6) கொடுங்கையூர் 4-ம் பாகத்தில் 45, 47, 48, 49, 11, 21-A, 22-ல் உள்ள பள்ளங்களை மண்ணால் நிரப்புதல் (KGR/DB/893-A/80) | ரூ. 1390 | 22-8-80 முதல் 4-9-80 வரை | 5-9-80 |

ஒப்பந்த நமூனாக்களை வியாசர்பாடி (தன்னிறைவு வீட்டுமனை வசதி கோட்டம் எண் 3) செயற்பொறியாளர் அலுவலகத்தில் ரூபாய் 20 (விற்பனை வரி உட்பட) (திருப்பித்தரமாட்டாது) செலுத்தி 22.8.80 முதல் மேலே குறிப்பிட்டுள்ள தேதிவரை அலுவலக நேரத்தில் 15.00 மணி வரை பெற்றுக் கொள்ளலாம.

மேற்கொண்டு கூடுதல் விவரங்களை செயற்பொறியாளர், தன்னிறைவு வீட்டு மனை வசதி கோட்டம் எண் 3 அவர்களிடமிருந்து பெற்றுக்கொள்ளலாம்.

குறிப்பு: 1' முன்வைப்புத்தொகை உரிய முறையில் கட்டி அனுப்பி வைக்காத ஒப்பந்தக்காரர்களின் ஒப்பந்தப் புள்ளிகள் [illegible] படியபாக ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது.

2. [illegible] மூலம் ஒப்பந்தப் படிவங்களை பெறவிரும்புவோர் [illegible] உரிய கட்டணமான ரூபாய் 10/- (தபால் செலவு) [illegible] செயற்பொறியாளர் அவர்கள் விலாசத்திற்கு அனுப்பி பெற்றுக் கொள்ளலாம்.

**செயற் பொறியாளர்**
தன்னிறைவு வீட்டு மனை வசதி கோட்டம் எண்-3,
சென்னை 600039

DIPR/36026/80-28

---

## தமிழ்நாடு அரசு

நெடுஞ்சாலை ஊரகப் பணித்துறை
தேசிய நெடுஞ்சாலை வட்டம்
சென்னை-600 020

### ஒப்பந்த அறிவிப்பு

தமிழ்நாடு ஆளுநர் அவர்களுக்காக, அவர்களுடைய சார்பில் கீழ்க்கண்ட வேலைகளுக்கு அரக்கு முத்திரையிட்ட இனவாரி ஒப்பங்கள், இந்திய தர நிர்ணய கட்டுப்பாடு கழகத்தின் உரிமம் பெற்றுள்ள, தமிழ்நாட்டு எல்லைக்குள் இரும்பு உருக்கு ஆலைகள் உள்ள ஒப்பந்தக்காரர்களிடமிருந்து, கண்காணிப்புப் பொறியாளர் (தே. நெ.) சென்னை வட்டம். 37, முதல் பிரதான சாலை, காந்திநகர், அடையாறு, சென்னை-600 020 அவர்களால் 3-9-80 அன்று மாலை 3 மணி வரை (அலுவலக கடிகாரப்படி) பெற்றுக்கொள்ளப்பட்டு அதே நாளில் மாலை 3-30 மணிக்கு திறக்கப்படும்.

| வரிசை எண் | வேலையின் விபரம் | அளவு | முன் வைப்புத் தொகை |
|---|---|---|---|
| 1) | பெரிய அளவுள்ள இரும்பு பாளங்களை முறுக்கேற்றப் பட்ட கம்பிகளாக மாற்றுதல். Re-rolling of Steel billets into R. T. S. bars of various dia. | 350 மெ.டன். | ரூ. 1,750 |

ஒப்பந்த நமூனாக்கள் 20-8-80 முதல் 2-9-80 வரை கோட்டப் பொறியாளர் (தே.நெ) இயந்திரக் கோட்டம், சென்னை-600 025 (நெடுஞ்சாலை ஆராய்ச்சி நிலைய கட்டிடம்) அவர்கள் அலுவலகத்திலிருந்து ரூ. 8.40 (விற்பனை வரியுட்பட) கட்டி அலுவலக நாட்களில் அலுவலக நேரத்தில் விண்ணப்பித்து பெற்றுக் கொள்ளலாம். இத்தொகை எக்காரணத்தை முன்னிட்டும் திருப்பித்தரப்பட மாட்டாது. ஒப்பப் பத்திரங்கள் வாங்குவதற்கான விண்ணப்பங்கள் ஒப்ப நாள் அன்று அனுமதிக்கப்படமாட்டா. வங்கி உறுதிப் பத்திரங்கள் முன்வைப்புத் தொகைக்கு ஏற்றுக் கொள்ளப்படமாட்டா.

கூடுதல் விவரங்களுக்கு, கோட்டப் பொறியாளர் (தே.நெ) இயந்திரக் கோட்டம், நெடுஞ்சாலை ஆராய்ச்சி நிலையக் கட்டிடம், சென்னை-600 025 அவர்களை அணுகவும்.

**கண்காணிப்பு பொறியாளர்**
தேசிய நெடுஞ்சாலை, சென்னை-20.

சென்னை-600 020
நாள்: 2-8-1980

DIPR/30748/80-24/AAB

---


சென்னை நகருக்கு இன்னுமோர் அணிகலன்!

## விவேக் அண்டு கோ
## தி. நகர் ஷோரூம்
## நாளை துவக்க விழா

**திருமதி மாதுரி மாத்தூர்**
(பம்பாய், ஸுமீத் ரீஸர்ச் & ஹோல்டிங்ஸ் பிரைவேட் லிமிடெட் நிறுவனத்தின் சேர்மன்)
ஷோருமை துவக்கி வைக்கிருர்.

**திரு எஸ்.பி. மாத்தூர்**
(பம்பாய், பவர் கண்ட்ரோல் & அப்ளையன்ஸஸ் (பம்பாய்) பிரைவேட் லிமிடெட் நிறுவனத்தின் சேர்மன்)
விழாவிற்கு தலைமை தாங்குகிருர்

எமது வாடிக்கையாளர்கள்,
ஆதரவாளர்கள், நண்பர்கள்
யாவரும் வருகை தந்து
கௌரவிக்குமாறு
கோருகிறோம்

**விவேக் அண்டு கோ**
மைலாப்பூர்
புரசைவாக்கம்

ஷோரூம் உட்புற அமைப்பு அலங்கார நிருமிப்புகள் திரு. எம். சகாதேவன் மற்றும் ரதி & அசோசியேட்ஸ் அவர்களால் சிருஷ்டிக்கப்பட்டு திரு. பி. பரமசிவ ஆசாரி அவர்களால் அமைத்துக் கொடுக்கப்பட்டுள்ளது

VIVEK & CO


